23 மான்யங்களின் மொத்தத் தொகை: ரூ.452348500/- அவைகள்:-
ஸ்டாம்புகள் ரூ.2522000/- ரிஜிஸ்டிரேஷன் ரூ.5492500/- மோட்டார் வாகன சட்டம் ரூ.948-
300/- நீதி நிர்வாகம் ரூ.15282800/- கால்நடை வைத்தியம் ரூ.620131/- இன்கோஷு, மின்
வனம் ரூ.8465900/- சிவில் ஒர்க்ஸ் ரூ.58428600/- சிவில் ஒர்க்ஸ் இயந்திரக் கருவிகள்
ரூ.16795100/- சிவில் ஒர்க்ஸ் (கிராண்ட் இன் எய்ட்) ரூ.12133800/- பென்ஷன் ரூ.19399900/-
ஸ்டேஷனரி, பிரிண்டிங் ரூ.6573100/- மிஸலேனியஸ் ரூ.11991700/- ரோடு போக்கு வரத்து
திட்டங்கள் அன்றாடச் செலவுகள் ரூ.11015800/- (மேற்கண்டவை ரெவின்யு கணக்கின்
கீழ் வருகின்றன) மூலதனக் கணக்கு சம்பந்தமாக பின் கண்ட கோரிக்கைகள் வோட்டு
க்கு விடப்பட்டன. ஜமீன் ஒழிப்பு திட்டத்தின் கீழ் நஷ்ட ஈடு ரூ.7000000/- நீர்ப்பாசன திட்டம்
ரூ.89030100/- தொழில்வளர்ச்சிக்கு மூலதன வெளியீடு ரூ.3249800/- சிவில் மராமத்து திட்ட
மூலதன வெளியீடு ரூ.11681800/- மின்சார திட்ட மூலதன வெளியீடு ரூ.80000000/-
ரோடு போக்கு வரத்து திட்டங்களுக்கு மூலதன வெளியீடு ரூ.647300/- பென்ஷன்
மொத்தத் தொகை பட்டுவாடா ரூ.100-0.0 /- ராஜாங்க வர்த்தக திட்ட மூலதன வெளியீடு
ரூ.880800/- கடன் முன் பணம் ரூ.41238300/- ***

<u>சர்க்காரின் ஆஸ்தி:</u>

எல்லா வகைகளிலுமாக சென்னை ராஜ்ய சர்க்காரின் கடன் பொறுப்பு 1952 மார்ச் 31 வரை சுமார் ரூ.92/- கோடி. ஆனால் அதே தேதியில் சர்க்காருக்கு வருமான மளிக்கக் கூடிய ஆஸ்திகளும் மூலதனங்களும் ரூ.131 கோடி இருக்கிறது. இதில் சுமார் ரூ.54½ கோடி நீர்ப்பாசன மின்சார திட்டங்களில் உள்ள மூலதனம். ஸ்தல ஸ்தாபனங்களுக்கும் கூட்டுறவுக்கும் கொடுத்துள்ள கடன் சுமார் 21 கோடி. இவை தவிர வெவ்வேறு நிதிகளில் சேர்ந்துள்ள தொகை 21 கோடி. வருமானம் அளிக்கும் இந்த வகைகளை மட்டுமன்றி கட்டிடங்களாகவும், ரோடுகளாகவும், காடுகளாகவும் சர்க்காரிடம் பல ஆஸ்திகள் இருக்கின்றன.

<u>இதுவரையுள்ள கடன் பொறுப்பு:</u>

1. 1951-52ல் மீட்க வேண்டிய 4½ வட்டிக்கு கடன் ரூ.317.77 லக்ஷம்.
2. மத்திய சர்க்காரிடமிருந்து வாங்கிய பழைய கடன்கள் ரூ.1701.00 லக்ஷம்.
3. 1952க்கும் 1962க்குமிடையில் மீட்க வேண்டிய சர்க்கார் கடன் பத்திரங்களின் வெளியீடு ரூ.2241.25 லக்ஷம்.
4. மீட்க வேண்டாமல் வட்டி மட்டும் செலுத்த வேண்டிய சர்க்கார் கடன்கள் ரூ.2.52 லக்ஷம்.
5. மாகாண கவர்ன்மென்ட் நிதி டிபாஸிட்டுகள் ரூ.696.13 லக்ஷம்.

கூடுதல் சுமார் ரூ.4960.67 லக்ஷம்.

இவற்றுக்கான வட்டிப் பொறுப்பும் மீட்சிப் பொறுப்பும் வருஷாவருஷம் சுமார் 2 கோடியே 64 லக்ஷம்.

<u>இவ்வருஷம் தீர்க்கப்படுவது:</u> மேலே கூறிய கடன் பொறுப்பில் மத்திய சர்க்காரிடம் வாங்கிய கடன் நீங்கலாக, மார்க்கெட்டில் வாங்கிய கடன் சுமார் 23 கோடியே 45 லக்ஷம். இதில் 104 லக்ஷம் மீட்கப்பட்டது.

1952ம் ஆண்டில் மீட்கப்பட வேண்டிய 3% லோனும் கடன் முழுவதும் 1952-53ல் பணம் செலுத்தப் பட்டுவிடும். ஆகையால் பழைய கடனின் அவ்வாண்டு இறுதியில் மீதமாகக் கூடிய பொறுப்பு 20 கோடி 22 லக்ஷம். இதற்காக "கடன் மீட்சி நிதியில்" ஏற்கனவே 4 கோடி 21 லக்ஷம் சேர்ந்திருக்கிறது. கடன் பொறுப்பில் சுமார் 21% நிதி சேகரமாகி இருக்கிறது.

<u>இதர பொறுப்புகள்:</u> கூட்டுறவு அடமான பாங்கி கடனுக்கு சுமார் ரூ.560 லக்ஷத்துக்கு சர்க்கார் "உத்தரவாதம்" கொடுத்திருக்கிறது. சென்னை ராஜ்ய கூட்டுறவு பாங்குக்காக சுமார் ரூ.235 லக்ஷத்துக்கு சர்க்கார் "உத்தரவாதம்" அளித்திருக்கிறது. சென்னை இண்டஸ்ட்ரியல் இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பரேஷன் (தொழில் வளர்ச்சி டெவலப்மெண்ட் கார்ப்பரேஷன்) சர்க்கார் இதுவரை ஏற்றுக்கொண்டுள்ள பொறுப்பு 24 லக்ஷம்.

* தினமணி 30.7.52 *